[1st November 1958

*Pumpsets*

* 772 *Q*.—Sri N. R. THIAGARAJAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) **1946**-ல் சென்னை ராஜ்யத்தின் தற்போதைய ஜில்லாக்களில் எத்தனை விவசாய பம்பு செட்டுகளுக்கு மின்சரரம் சப்ளை செய்யப்பட்டிருந்தது ?

(ஆ) தற்போது எத்தனை பம்ப் செட்டுகளுக்கு மின்சாரம் சப்ளை செய்யப்படுகிறது ?

The Hon. Sri V. RAMAIAH : (*a*) 5,678.

(*b*) 64,522 as on 1st May 1958.

*Separate department for distribution of electrical goods*

* 773 *Q*.—Sri S. M. ANNAMALAI : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

விவசாயிகளுக்குத் தேவையான மின்சார சாமான்கள், மோட்டார் ஸ்டார்ட்டர், ஸ்விட்ச் இவைகளை வினியோகிக்க தனி இலாகா ஏற்படுத்தும் திட்டம் என்னவாயிற்று ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : There was and is no proposal to form a separate department for the distribution of electric motors, starters and switches to the agriculturists.

Sri S. M. ANNAMALAI : ஸார், விவசாயத்திற்கு வேண்டிய மின்சார மோட்டார்கள், ஸ்டார்ட்டர்கள், ஸ்விட்சுகள் இவைகளெல்லாம் நம்முடைய மாநிலத்திலேயே இப்பொழுது செய்கின்றார்கள். இருந்தாலுங்கூட, போதிய அளவு உற்பத்தி செய்யவில்லையாகையால் வெளி நாடுகளிலிருந்து வியாபாரிகள் இறக்குமதி செய்து, விவசாயிகளை ஏமாற்றி அதிக விலைக்கு விற்று, ஏராளமான இலாபம் பெறுகிறார்கள். ஆகையால் சர்க்கார், தனி இலாகாவை ஏற்படுத்தி, அதன்மூலமாக விற்பனை செய்வதற்கு ஏற்பாடு செய்யுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இப்பொழுது நிலைமை எப்படி இருக்கிறதென்றால் 50,000 மோட்டார்கள் இந்த நாட்டிலே உற்பத்தி செய்யப்படுகிறது. ஆகையால், உள்நாட்டிலிருந்தே இதெல்லாம் கிடைக்கும். தனி இலாகா இதற்கு அவசியம் இல்லை என்று தான் அரசாங்கம் கருதுகிறது.

*Order under section 144 in Mettupalayam*

* 774 *Q*.—Sri V. K. KOTHANDARAMAN (on behalf of Sri M. Kalyanasundaram) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the reasons for promulgating an order under section 144 banning meetings and processions at Mettupalayam, Coimbatore district, on or about 1st September 1958; and

(*b*) whether a copy of the order would be placed on the table of the House?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The reasons are given in the order, a copy [a] of which is placed on the table of the House.

---

[a] Printed as Appendix IV on pages 368–369 infra.